**தலைவியின் துன்பநிலையை தோழி எவ்வாறு அறத்தோடு நின்று விளக்குகிறார்?**

அறத்தொடு நிற்றல்:

தலைவியின் தாய், தன் மகளுக்கு என்ன நேர்ந்தது என்று தெரியாமல் மிக்க கவலையடைந்து ஊரில் உள்ள வல்லவர்களையும் கட்டுவீச்சிகளையும் அழைத்து வந்து தலைவியின் நோயைப் பற்றி கேட்டால் அவர்களோ இது இறைவனால் உண்டானது என்று கூற , தாய் இறைவனுக்கு மலர்களை தூவி வாழ்த்தி , பொருள்களை காணிக்கையாகக் கொடுத்து வழிபட்டாள் . ஆனால் தலைவியின் நோய் நீங்காத காரணத்தால் வருத்தமுடன் இருந்தாள்.

என் தோழியின் அழகிய உடல் கெடவும், நறுமணம் மிகுந்த தோள்கள் மெலியவும் , அவருடைய வளையல்கள் கழன்று விழுவதைப் பிறர் பார்க்கவும் தனிமை எண்ணம் தோன்றி அவளை அவ்வப்போது துன்பம் கொள்ளச் செய்கிறது . இவை எல்லாவற்றிற்கும் காரணமாக இருந்து இவள் உயிரைக் கொல்லச் செய்து கொண்டிருக் கும் நோயினை என்னுடைய சிறந்த சொல் வன்மையினால் அவளின் மனத்தின் வழி நின்று அவள் கூறியது போல நான் கூறுகின்றேன்.

முத்து மாணிக்கக் கற்கள் பொன் ஆகியவற்றைச் சேர்க்க வேண்டிய முறையில் கோர்த்துசத் செய்யப்பட்ட அணிகலன் ஏதேனும் ஒரு காரணத்தால் நூல் அறுந்து போனால் அதனை மீண்டும் சிறந்த தொழில் நுட்பக் கலைஞரைக் கொண்டு சீர்படுத்திக் கொள்ளலாம். முன்பு போல அழகுடைய அணிகலனாய் ஆக்கிக் கொள்ளலாம் . ஆனால் சான்றாண்மையும் , பெருமையும், நல்லொழுக்கம் ஏதேனும் ஒரு காரணத்தால் வாழ்நாளில் கெட்டுவிடுமானால் அதனால் ஏற்பட்ட குற்றத்தை நீக்கி மீண்டும் அவ்வுயர்வினைப் பெறுதல் மன மயக்கங்களை நீக்கித் துறவு வழி நிற்கும் தலைமைப் பண்புடைய முனிவர்களுக்கும் இயலாத செயலாகும் என்று அறிஞர்கள் கூறுவார்கள்.

தலைவியின் களவு மணம்:

நீங்கள் பொருத்தமானவருக்கு மணம் செய்து கொடுப்போம் எனத் தலைவி மீது கொண்டிருந்த காதலும் எம்மு டைய மடமைக் குணமும் நீங்கிச் செல்ல நீண்ட தேரினை உடையவரான தந்தையின் அரிதான காவலை கடந்துச் சென்று நானும் தலைவனும் செய்து கொண்ட காதல் மணம் இது . நாமே இதனைத் தாய்க்குக் கூறினால் புகழ் அல்லாமல் பழியும் வரும் . அவ்வாறு கூறிய பின்பு அவர்கள் நம் வழிக்கு வராவிட்டாலும் , எம்முடைய உயிர் நீங்கும் காலம் வரை காத்திருப்போம் . அவ்வாறு காத்திருந்தால் இப்பிறவியில் இல்லை எனினும் அடுத்து வரும் பிறவியிலாவது அவனோடு சேரும் காலம் வருவது உறுதி என்று கூறினாள்.

தலைவியின் காதல் நோய்:

ஒளி பொருந்திய நெற்றியும் தழைத்த கூந்தலுமுடைய தலைவியின் கைவளையல்கள் அவள் காதல் நோயால் மெலிந்ததால் நெகிழ்ந்தன. காதல் நோயை அறியாத காரணத்தால் செவிலி கட்டுவிச்சியிடம் குறிகேட்கத் தொடங்கினாள் . வேலன் என்பவனைக் கொண்டு வெறியோடு களம் அமைத்துக் காரணம் அறிய முயன்றாள் . தெய்வத்தால் ஏற்பட்ட நோய் என்று சிலர் கூறவும், தலைவியின் அழகு மெல்ல மெல்ல வாட்டங் கொண்டது. தோள்களும் மெலிந்தன . பிறர் காணுமளவிற்குக் கைவளையல் கழன்று, காதல் நோயை வெளிப்படுத்தியது . இவற்றையெல்லாம் கண்டு தோழியும் , தலைவியுற்ற நோயை உணர்ந்து கொண்டாள் . அவளுள் மறைந்திருந்து கிடந்த நோயை ஆராயமுற்பட்டாள் தோழி. அவளிடம் தோழி நெருங்கிக் கேட்க உண்மையைத் தலைவி வெளிப்படுத்தினாள்.

முத்து மணி பொன் முதலியவற்றாள் செய்யப்பட்ட அணிகலன்கள் சிதைவுற்றால் இழந்த புகழை மீண்டும் நிலைநிறுத்தல் இயலாது . நூல்கள் பல கற்ற பெரியோர்க்கும் அவ்வாறு புகழை மீண்டும் நிலைநிறுத்தல் என்பது எளிது என்று கூறமாட்டார்கள்.

தலைவி தனது பெண்மையையும் மடமும் ஒரு சேர நீங்க , தந்தையின் அரிய கட்டுக்காவலையும் மீறிக் காதலிக்கத் தொடங்கினாள். தானும் உள்ளம் கவர்ந்து தன் தலைவனும் ஆராய்ந்து விரும்பி மேற்கொண்ட களவு மணத்தை அன்னையிடம் கூறுவதால் பழி உண்டாகி விடுமோ ? அப்படி உள்ளம் விரும்பியவனை மணமுடிக்கப் பெற்றோர் ஒப்பவில்லையானால் பொறுத்திருந்து மறு பிறவியிலாவது அவனோடு கூடுவேன் எனத் தலைவி கூறியதைத் தோழி செவிலித்தாயிடம் தெரிவித்தாள்.

முடிவுரை:

தலைவி கொண்ட காதல் நோய் தோழிக் கூற்றால் தெரிய வருகின்றது. 'வீவரும் கடுநோய் ' 'உள்கரந்துறையும் உய் யா

அரும்படர்' எனக் கலங்கிக் கையற்று ஆனாச் சிறுமையன் இவளும் தேம்பும்' ஆகிய தொடர்கள் தலைவியின் காதல் நோயின் நன்கு உணர்த்துகின்றன.

---

**குறிஞ்சிப்பாட்டு:**

பத்துப்பாட்டு நூல்களில் ஒன்று . 261 அடிகளை உடையது. இது அகம் பற்றிய நூலாகும் . ஆசிய மன்னன் பிரகத த்தனுக்கு தமிழ்க் காதலின் மேன்மையினை அறிவுறுத்துவதற்காகப் கபிலர் இதனை இயற்றினார் . அறத்தோடு நிற்றல் என்னும் துறையை உடையது. அறத்தோடு நிற்றல் என்பது களவொழுக்கத்தைக் கற்பொழுக்கமாக மாற்றுதற்கு ஒரு தூண்டு கோலாகும்.

---

**திருமாலின் சிறப்புக்களை பரிபாடல் வழி நின்று விள்க்குக.**

மக்கள் கூறுவதை வெறுக்காது திருமகள் உறையும் மார்பனே நீ அருள் புரிதல் வேண்டும் . சிறந்த அந்தணர் காக்கும் அறமும் உன்னை விரும்புபவர்க்குப் பேரன்பு காட்டும் அருளும் நீ. தீய வழியில் செல்பவரைத் திருத்திக் கொள்கையை அறிவுறுத்தும் மறக்கருணையையும் பகைவர்க்குச் செய்யும் அச்சமும் நீ . விண்ணில் உலாவரும் சந்திரனும் வெம்மை தரும் சூரியனும் நீ . ஐந்து தலைகள் உடைய ஆற்றல் படைத்த சிவபிரானும் அவனது அழிக்கும் தொழிலும் ஐந்து தலையு ள்ள காளியின் மீது நடனம் புரிந்து அவனது வலிமையை அழித்தவனும் நீ . மேகமும் பரந்த ஆதாயமும் நிலமும் உயர்ந்த இமயமும் நீயே!

எல்லாம் நீயாக இருப்பதால் இன்னாரை ஒப்பாய் இத்தகு இயல்புடையவன் என்று சுட்டிக் காட்டி கூறுவதற்கு உலகில் யாரும் இல்லை. சக்கரப்படையை வலக்கையில் ஏந்தி உலகின் உயிர்கள் அனைத்திற்கும் முதல்வனாய்ப் பெரும்புகழோடு பொலிந்து தோன்றுகின்றாய். நின்னை ஒப்பார் யாரும் இல்லை.

உன்னை ஒப்பது உன்னுடைய புகழ் ஒளியே , பொன்னைப் போலும் ஒளிபொருந்திய ஆடையைக் கொண்டுள்ளாய் கருடக் கொடியையுடையாய். வலம்புரிச் சங்கினைக் கொண்டுள்ளா ய். இகழ்ந்தவர்களை அழித்து வென்ற சக்கரப் படையையுடையாய் கழுவப்பெற்ற தெளிந்த நீலமணி போன்ற நிறத்தையுடையாய் . எல்லையற்ற புகழை உடையாய். அழகுபொருந்திய மார்புடையாய்.

வேதங்கள் விரித்துக் கூறிய திருமாலே ! நாங்கள் இன்பம்மிக்க மனத்தோடு நாள்தோறும் விரும்பிய சுற்றத்தினர் சூழ உன் திருவடிகளைத் தொழுகின்றோம் . அத்திருவடிகள் பொலிந்து திகழ்க என வாழ்த்திப் போற்றுவோம் . எங்களுக்கு அருள் புரிவாயாக.

---

**வைகையில் பெரு வெள்ளம் தோன்றிய நிகழ்வையும் , மக்களின்செயலையும் கட்டுரை வடிவில் தருக?**

**முன்னுரை:**

மதுரை மாநகரிலே மிக அகன்று ஓடக்கூடிய பெரிய ஆறு வைகையாகும். அந்த ஆற்றில் கார்காலம் தொடங்கவும் மலையிலே மழை பொழிகின்றது . அம்மழை நீரானது அழகுடனும் தன்மையுடனும் வையையில் நிரம்பி வருகின்றது . அதனால் புத்துதணர்வு எழுகின்றது. மக்கள் மனக்கிளர்ச்சி கொள்ளுகின்றனர்.

**புதுவெள்ளம் வருகின்றது:**

கடல்நீர் நிறைந்தது . அதன் கண்ணுள்ள நீரை முகந்து கொண்ட மேகங்கள் வானில் பரவின.

தம்மிடத்தே நிறைந்து தளும்பும் நீரின் பாரத்தை அவை தாங்க முடியாமல் , அச்சுமையைக் கழித்துத் தாம் களைப்பாற நினைத்தன போன்று , அவை பெரு மழையைப் பொழிந்தன . நிலப்பகுதிகள் அனைத்தையும் மறைப்பது போல மிக்க மழைநீர் இடங்கள் தோறும் பெருகி நிறைந்தது . மலையிடத்துள்ள உயிரினங்கள் கலக்கம் அடைந்தன . மலையிலுள்ள மயில்கள் களிப்பால் அகவத் தொடங்கின மலைப்பகுதியில் படிந்திருந்த தூசுகள் நீங்கின . அருவிகள் விரைவோடு பொருந்திய மலையடிவாரப் பகுதிகளிற் பரவிசத் சென்றது . மலையும், காடும் வெள்ளக் கோலத்தில் காட்சியளித்தது.

**உழவர்கள் விரைந்து தம் தொழிலில் ஈடுபடல்:**

குற்றமற்ற நூலறிவையுடைவர் புலவர்கள் புகழ்தரும் அறிவுரைகளைக் கூறுவன அவர்களது நா. அந்நாவினால் அவர்கள் நல்ல கவிதைகளைப் புனைவார்கள் . அக்கவிதைகள் பொய்யாகப் போவதில்லை. அவை எங்கணம் சென்று பொருந்தி ப் பரவும் , விரைந்து அதன் பயனான தொழில்களையும் பெருகச்செய்யும் . இவ்வாறு குளிர்ந்த புனலானது எங்கணம் தாவிச் சென்று பரவிற்று, எங்ஙணம் பொருந்திப் பரவிற்று . இதனால் உழவர்கள் விரைந்து

தம் தொழில்களை மேற்கொள்ளும் ஆற்றலிலே ஈடுபட தொடங்கினர். புது வெள்ளத்தைப் பயன்படுத்தி வாழ்ந்தனர்.

புதுவெள்ளத்தில் காதலர் களிப்பு:

புதுநீரின் வரவறிந்த காதலருள்ளம் களிப்புக் கொள்ளுகின்ற வெள்ளத்தில் தினைத்தாட விரும்பிய அவர்கள் , அதற்கான பொருள்களோடு முறையாகப் புறப்படுகின்றனர். வையை பெருகி வருகின்றது, புதுநீரில் திளைத்தாட மதுரை மக்கள் எழுகின்றனர். அவர்களுள் இளைஞரும் கன்னியரும் பெரிதும் களிப்போடு செல்கின்றனர் . புகைத்தற்கரியனவும் சூடிக்கொள்வதற்கான பூவும் , வழிபாட்டிற்குரியனவாகிய பொருள்களும் நெருப்பும் ஆகிய பலவற்றை கைகளில் ஏந்தியவராக அவர்கள் செல்கின்றனர் . மகிழ்ச்சி பொருந்திய தம் காதலரை அந்நீர் விளையா ட்டிற்குரிய நாளணிகளை அணியச் செய்விக்கின்றனர். வையை ஆற்றின் கண் வரும் புது வெள்ளத்தின் வரவு, காதலரின் இம்முறைகளுக்கெல்லாம் பொருந்துவதாக உள்ளது.

மகளிர் நீராடல்:

வையைப் புதுவெள்ளத்தில் ஆடித் திளைக்கச் செல்வரான காதலர் , தம்முள் தழுவிக் கலந்து செல்வதனால் அவர் அ ணிகளும் பிறவும் தம்முட் கலந்து மயங்கின . அணயணியாக மக்கள் வையை நோக்கிச் செல்கின்றனர்.

உள்ளத்தின் களிப்பினாலே அவர்கள் நடையில் மிடுக்குத் தோன்றுகின்றது. தோளில் அணிந்திருந்த தோள் வளைகள் தோள்கள் பூரித்தமையால் செறிவு கொண்ட வையாயின. அதனால், அவற்றை முன்னங்கைகளில் இறக்கி விட அவை அங்கே ஒன்றோடொன்று மோதி ஒலிசெய்த வண்ணமிருந்தன . மார்பினும் தோளினும் எழுதப்பெற்ற தொய்யிற் கொடிகளோடு சேர்ந்து மார்பிற் கிடந்தசையும் அழகிய ஆரங்கள் தம்முட் கலந்து தழுவுதலால் மயங்கி உதிர்த்தன . தொகுதிப்பட்ட கிரணங்களையுடைய முத்துச் சரங்கள், தம் தொடுப்பினின்றும் நீங்கியவையாய், சந்தன குங்குமக் குழம்புகளிலே படிந்து நிறம் மாறுபட்டன . நகங்களிலும் கன்னங்களிலும் ஊட்டப் பெற்ற செம்பஞ்சிக் குழம்பும், சந்தன குழம்பும் தம்முட் கலந்து கரைந்து மிகுதியான வண்டல் போல் படிந்து தோன்றின.

ஊரின்கண் ஒலி தோன்றல்:

தம் நிறையழிந்து, ஆர்வத்தாலே எல்லை கடந்து சென்றது போலப் புது வெள்ளமும் கரையாகிய எல்லையைக் கடந்து செல்லத் தொடங்கியது என்பதுமாம் . இதனால் நீராடச் செல்லும் இவரது ஆரவாரத்துடன் , கரையடைக்க வருக என்ற பறையொலியும், கூச்சலுமாக அனைத்து இடங்களிலும் நிறைந்து , மதுரை நகரமே ஒலிமிக்கதாயிற்று.

மகளின் முலைகளிலும் ஆடவர் மார்பினும் அணிந்திருந்த அணிகள் தம்முட் பொருந்தி ஒன்றுடன் ஒன்று கலந்து மயங்கி கிடந்தன. களிப்பில் நிறைந்த காப்பினைப் பொங்கியெழும் அவரது ஆர்வமானது உடைத்தாற் போல கரையாகிய சிறையை உடைத்தப்படி வையையும் பெருகி வந்தது . வையை வெள் ளத்தின் அலைகள் கரையாகிய தடையை உடைத்தன . கரையை அடைத்துத் தடையை ஏற்படுத்த அனைவரும் வருகவெனப் பறையை அறைக என காவலர் கூவினர் . அவர் குரலொடு கரையடைக்க வம்மினென்று அறையப்பட்ட பறையினின்று எழுந்த ஒளியும் கலந்து, ஊரே ஒலியோடு விளங்கலாயிற்று ஊரவரும் ஒலியோடு ஆற்றை நோக்கி எழுந்து வரலாயினர்.

முடிவுரை:

மதுரையில் தோன்றிய புதிய வெள்ளப்பெருக்கு மக்களைப் மகிழ்வித்து மதுரையை அழகுப்படுத்தியது.

---

குறுந்தொகை:

நல்ல குறுந்தொகை - பாரதம் பாடிய பெருந்தேவனார் கடவுள் வாழ்த்து பாடியவர் - 401 பாடல்கள் - ஆசிரியர்பா - 205 புலவர்கள் பாடியது - 4அடி சிற்றெல்லை 8அடி பேரெல்லை - தொகுத்தவர் பூரிக்கோ - தொகுப்பித்தவர் பெயர் தெரியவில்லை.

- *குறிஞ்சித் திணை* - 3பாடல் - தலைமகள் கூற்று - *தேவகுலத்தார்* - "நிலத்தினும் பெரிதே".
- *பாலை திணை* - 7பாடல் - கண்டோர் கூற்று - *பெரும்பதுமனார்* - "வில்லோன் காலன".
- *நெய்தல் திணை* - 145பாடல் - தலைவி கூற்று - *கொல்லனழிசி* - "உறைபதி அன்று".
- *முல்லை திணை* - 275பாடல் - தோழி கூற்று - *ஒக்கூர் மாசாத்தி* - " முல்லை ஊர்ந்த".

- *மருத திணை* - 364பாடல் - இற்பரத்தை கூற்று - *ஔவையார்* - “அரில்பவர்ப் பிரம்பின்”

குறிஞ்சி - தலைமகள் கூற்று - தேவகுலத்தார்:

தலைமகன் சிறைப்புறமாக , அவன் வரைந்து கொள்வது வேண்டி, தோழி இயற் பழித்தவழி , தலைமகள் இயற்பட மொழிந்தது.

மலைச்சாரலில் கரிய பாம்பு உடைய குறிஞ்சிச் செடியின் மலரில் இருந்து பெருமளவு தேனைச் சேகரிக்கும் நாடனுடன் எங்கள் நட்பு நிலத்தைக் காட்டிலும் பெரியது . வானத்தக் காட்டிலும் உயர்ந்தது . நீரைக் காட்டிலும் அளத்தற்கரிய ஆழமானது. தலைவன் தன்னோடு கொண்ட காதலின் உயர்வை தலைவி சொல்லக்கேட்ட தலைவன் காலங்கடத்தக்கூடாது என வற்புறுத்துதல் மறைபொளாகும்.

பாலை - பெரும்பதுமனார் - கண்டோர் கூற்று:

கழைக் கூத்தாடிகள் மூங்கில் கால்களை நட்டு அதன்மே ல் கயிறுகட்டி நின்று ஆடும்போது கொட்டுகின்ற பறை ஓசைபோல வாகை மரத்தின் காய்களின் வெண்மையான நெற்று காற்றடிக்கும்போது ஒலிக்கும் . மூங்கில்செறிந்த காட்டு வழியில் தம் கருத்துடன் கருதிச் செல்வோர் இருவரில் கையில் வில்லை உடையவன் காலில் கழல்கள் உள்ளன.

தோள்வளையணிந்த மென்மையான பெண்ணின் காலில் சிலம்புகள் உள்ளன . இருவரும் நல்லவர்கள்தாம் . ஆனால் அவர் செல்லும் காட்டு வழியின் கொடுமையை எண்ணினால் இரங்கத் தக்கவர்கள்.

நெய்தல் - தலைவிகூற்று - கொல்லனழிசி:

வரைவிடை ஆற்றாது தோழிக்குத் தலைமகள் சொல்லியது. கடற்கரைச் சோலையினை உடைய நெய்தல் நிலத்துக்குரிய தலைவனின் பிரிவுக் கொடுமையினை எண்ணி மிகுந்த துன்பத்துடன் வருந்தி இருக்கிறாள் தலைவி . இவளின் நிலையை அறிந்து ஊரார் ஏன் துயிலவில்லை ? என்று கேட்பதற்கும் இல்லை . ஊரார் நல்ல உறக்கத்தில் இருக்கின்றனர் . தலைவனைப் பிரிந்து இருக்கும் இந்த இரவானது நீண்ட இராப் பொழுதாக உள்ளது . எனவே, இச்சிறு குடியிருப்பு நாம் உறைவதற்கு ஏற்ற இடம் அன்று எனத் தோழிக்குத் தலைமகள் சொல்லியது.

முல்லை - தோழி கூற்று - ஒக்கூர் மாசாத்தியார்:

பருவ வரவின்கண் வரவு நிமித்தம் தோன்ற தோழி தலைமகட்கு உரைத்தது.

தோழி! அப்பகுதியில் மணி ஓசைகள் கேட்கின்றன . மாலைக் காலத்தில் மேய்ச்சலுக்குச் சென்ற ஆநிரைக் கூட்டம் திரும்பி வருகின்றது . அதில் காளைகளும் பசுக்களும் வருகின்றன. பசுக்களின் கழுத்தில் கட்டியமணிகளின் ஓசையா ? அல்லது பொருள்தேடச் சென்ற தலைவர் தான் சென்ற செயலை முடித்து நிறைந்த உள்ளத்தோடு வில்லாற்றலுடைய இளைஞர்கள் இரு பக்கமும் பாதுகாப்பாக வர மழைபெய்ததால் காட்டாற்று வெள்ளத்தால் ஈரமான மணற்பகுதியில் வருகின்ற தேரின் மணி ஓசையா என்று முல்லைக் கொடி படர்ந்த குன்றின்மேல் ஏறிப் பார்த்து வருவோம், நீ வருக எனக் கூறியது.

மருதம் - இற்பரத்தை கூற்று - ஔவையார்:

வேறு ஒரு பரத்தை தன்னைப் புறங்கூறினாள் எனக் கேட்ட இற்பரத்தை, அவட்குப் பாங்காயினார் கேட்பக் கூறியது.

பின்னிக் கிடக்கும் பிரப்பங் கொடிபோக் கோடுகள் பொருந்திய முதுகினை உடைய நீர்நாய்க்கு வாளைமீனை நாள்தோறும் உணவாகப் பெறுகின்ற நாட்டையுடைய மருதநிலத் தலைவனுக்குப் பொன்னால் செய்த ஒளிபொருந்திய தொடிஅணிந்த தகுதியுடைய பரத்தை என்னைப் புறம் கூறுகி றாள் என்று சிலர் சொல்கின்றனர்.

இதை அவள் தெளிவாக அறிவதற்கு வளைந்த மணிகட்டு பொருந்திய பருத்த தோளையும் ஒளிபொ ருந்திய வளையல்களையும் உடைய மகளிர் கைகோர்த்து ஆடும் துணங்கைக் கூத்து நாள் வந்துவிட்டது, அப்போது அப்பரத்தையின் கண் முன்பாகவே தலைவன் எனக்குத் தலைக்கை தந்து ஆடுவதை மள்ளர்களின் சேரிப்போர் நடைபெறுமிடத்தில் காணலாம்.

## புறநானூறு:

புறப்பொருளைப் பற்றிய 400பாடல்கள் கடவுள் வாழ்த்தொடு - 399 பாடல்கள் - 157 புலவர்கள் பாடியது - தொகுத்தவர் தொகுப்பித்தவர் பெயர் தெரியவில்லை - புறப்பாட்டு, புறம், புறம் நானூறு எனவும் அழைக்கப்படுகிறது . 267 மற்றும் 268 ஆம் பாடல்கள் கிடைக்கவில்லை - 17 பெண்பாற் புல வர்கள் பாடியுள்ளனர்.

- 114 பாடல் (உயர்ந்தோன் மலை ) பாடியவர் ∞ *கபிலர்* - பாடப்பட்டோன் ∞ *வேள்பாரி* - திணை ∞ பொதுவியல், எல்லாத் திணைகளுக்கும் பொதுவான செய்திகளைத் தொகுத்துக் கூறுவது - துறை ∞ கையறுநிலை. தலைமகன் இறந்த நிலையில் அவன் பெருமை சொல்லி வருந்தி நிற்றல் - “ஈண்டுநின் றோர்க்கும் தோன்றும்; சிறுவரை”நீ
- 138 பாடல் (நின்னை அறிந்தவர் யாரோ?) - பாடியவர் ∞ மருதன் இளநாகனார் - பாடப்பட்டோன் ∞ ஆய் ஆண்டிரன் - திணை ∞ பாடாண். ஒருவருடைய புகழ் , வலிமை, கொடை, அருள், ஆகியவற்றைப் பற்றி சிறப்பித்துக் கூறுவது - துறை ∞ பாணாற்றுபடை. பரிசு பெற்ற பாணன் , பரிசு பெற வரும் பாணனுக்குச் செல்லும் வழியும் புரவலன் புகழும் கூறுதல் - “ஆனினும் கலித்த அதர்பல கடந்து”.
- 163 பாடல் (தமிழ் உள்ளம்) - பாடியவர் ∞ பெருஞ்சித்திரனார் - பாடப்பட்டோன் ∞ புலவரின் மனைவி - திணை ∞ பாடாண் - துறை. பரிசில் - பெருஞ்சித்திரனார் குமணனைப் பாடிப் பரிசில் கொணர்ந்து மனையோட்குச் சொல்லியது - “நின்நயந்து உறைநர்க்கும், நீநயந்து”.
- 204 பாடல் (அதனினும் உயர்ந்தது !) - பாடியவர் ∞ கழைதின் யானையார் - பாடப்பட்டோன் ∞ வல்வில் ஓரி - திணை ∞ பாடாண் - துறை ∞ பரிசில் துறை. புரவலரிடம் பரிசிலர் தாம் நினைத்து வந்த பேறு இது என்று கூறுதல் - “ஈ” என இரத்தல் இழிந்தன்று; அதன்எதிர்”.
- 205 பாடல் (பெட்பின்றி ஈதல் வேண்டல் !) - பாடியவர் ∞ பெந்தலைச் சாத்தனார் - பாடப்பபட்டோன் ∞ கூடிய நெடுவேட்டுவன் - திணை ∞ பாடாண் - துறை ∞ பரிசில் - “முற்றிய திருவின் மூவர் ஆயினும்”.

## வேள்பாரி - கபிலர் - கையறுநிலை - உயர்ந்தோன் மலை:

கபிலர் பாரி மகளிரது நிலைக்கு வருந்திப் பறம்பைக் கடந்து செல்லும் போது பாடியது ஆகும். தேர் வழங்கும் என்னாமல் தேர் வீசும் எனக் கூறும் சொற்களுள் உட்பொருளாக விளங்கும் பெருந்தகைமையை நினைந்து போற்றத்தக்கது.

எங்கிருந்து பார்த்தாலும் பறம்பு மலை தெரியும் . சற்றுத் தூரத்தே நின்று பார்த்தாலும் மலை தெரியும் . யானை மென்று குதப்பிய கவளச் சிதறல்போல மதுவடித்து ஒதுக்கப் பெற்ற சக்கையின் சிதறல் ஒழுகும் முற்றமாகியும் கொடை வழங்கிய இடமாகியமாகிய பாரியின் பறம்பு மலை.

## ஆய் ஆண்டிரன் - மருதன் இளநாகனார்

பசு இனம்மிக்க வழி பலவற்றையும் கடந்து , மான் கூட்டம்மிக்க மலையைக் கடந்து மீன் தொகுதிமிக்க நீர்நிலை பலவற்றைக் கடந்து உன்னை நினைத்து வளமான இசையமைந்த சிறிய யாழையும் சிதைந்த உடையையும் உடைய மூத்த பாணனே ! நீ பெரிய எண்ணம் உடையாய் . உன் தலைவன் இப்போது போய்ப் பின்பு வா என்று சொல்ல மாட்டான் . தழைத்த கூந்தலை உடைய விறலிக்குத் தலைவன் கிளிதங்கிய பெரிய தினைப்புனத்தில் மரப்பொந்தில் வைக்கப்பெற்ற பெரிய கதிர்போன்றவன் . அதனால் உன்னை முன்பும் வந்தான் என்று அறிவார் யார்? எவரும் இலர். பாணனை ஆயிடத்துச் செல்லக் கூறி ஆற்றுப்படுத்தலின் , பாணாற்றுப்படை ஆயிற்று , அவன் தப்பாமல் பரிசில் தருவான் என்பதை உணர்த்த ‘நின் இறை’ என்றார் மருதன் இளநாகனார்.

## புலவரின் மனைவி - குமணன் - பெருஞ்சித்திரனார்:

என் மனைக்கு உரியவளே ! உன்னை விரும்பும் மகளிர்க்கும், நீ விரும்பும் மகளிர்க்கும், உன் உறவினரில் கற்புடைய மூத்த மகளிருக்கும், நம் குடும்பத்தின் பசிநீங்க நெடுநாளும் கடன் தந்து உதவியோர்களுக்கும் , மற்றம் இன்னாரென்று கருதாமல் , என்னிடமும் கேட்காமல் , வளமுடன் வாழலாமென்று பத்திரப்படுத்தி வைத்துக் கொள்ள நினையாதும் , முதிரமலைத் தலைவனான குமணன் நல்கிய இப்பெருஞ் செல்வத்தை , நீயும் அனைவருக்கும் வாரி வாரி வழங்குவாயாக.

குமணன் அளித்த பரிசிலை இவ்வாறு செலவிடுக என்று புலவர் தன் மனைவியிடம் கூறுகிறார் . இது மனைவிக்கு மகிழ்ந்து கூறியது என்கிறார் நச்சினார்க்கினியர்.

**வல்வில் ஓரி - கழைதின் யானையார் - அதனினும் உயர்ந்தது:**

ஒன்றைத் தா என இரத்தல் இழிந்தது . அவ்வாறு யாசித்தவர்க்கு 'ஈயேன்' என்று மறுத்தலோ அதனினும் இழிவு உடையதாகும். 'கொள்வாயாக' என ஒன்றைத் தானே விரும்பிக் கொடுத்தல் உயர்ந்தது அவ்வாறு கொடுத்தாலும் 'கொள்ளேம்' என்பது அதனினும் மிக உயர்ந்தது . தண்ணீர் வேட்கையினர் கடல்நீரை உண்ணமாட்டார்கள். ஆவும் மாவும் கலக்கிய சேற்று நீர் எனினும், அத் தாழ்ந்த இடத்திற்குச் செல்லும் வழி பலவாகும் . இரவலர் பரிசில் பெறாத போது , தாம் நாடி வந்தவரைப் பழித்துப் பேசாது, தாம் புறப்பட்ட நேரத்தையு ம் புள் நிமித்தத்தையுமே பழிப்பர். அதனால் நீ எனக்கு இல்லை என்று சொன்னாலும் உன்னை நான் ஒருபோதும் வெறுப்பவன் இல்லை . மழை போல வழங்கும் ஒளியே! நீ நீடு வாழ்வாயாக!

ஈயேன் என்னும் இழிபினும் , கொள் எனக் கொடுக்கும் உயர்பினும், நினக்குத் தக்கது அறிந்து செய்க என்று கூறி யது ஆகும்.

**கடிய நெடுவேட்டுவன் - பெருந்தலைச் சாத்தனார்:**

மூவேந்தரே எனினும், எம்மைப் பேணி மதியாது கொடுப்பின், அதனை நாம் வேண்டுவேம் இல்லை . அஞ்சி வந்து அடைந்த பகைவர்க்கோர் புகலிடமாயும் , எதிர்த்து வந்தவரைக் கொன்று அழிக்கும் வாள்வலி உடையவனாயும் விளங்கும் , முல்லைவேலிக் கோடைமலைத் தலைவனே ! சிறிய பெரிய பழுகளிலிருந்து மான் கூட்டத்தைக் கலைக்கும் சினநாய்களும் , வலிய வில்லும் கொண்டு வேட்டுவனே ! கடலைசத் சார்ந்த முகிலினங்கள் நீர் முகந்தன்றிமீளா ; அது போலப் பரிசிலர் சுற்றம் , பெரிய தந்தங்களை உடைய களிறுகளை வழங்கிப் போற்றினாலன்றித் திரும்பிச் செல்லாது என அறிவாயாக.

---

**ஐங்குறுநூறு:**

மருதம் ஓரம்போகியார் - நெய்தல் அம்மூவனார் - குறிஞ்சி கபிலர் - பாலை ஓதலாந்தையார் - முல்லை பேயனார் - தொகுத்தவர் புலத்துறை முற்றிய கூடலூர் கிழார் - தொகுப்பித்தவர் யானைக்கட்சேய் மாந்தரஞ் சேரலிரும்பொறை - கடவுள் வாழ்த்து (சிவன்) பாரதம் பாடிய தேவனார் - 500 பாடல்கள்.

- மருதம் (வேட்கைப்பத்து) - ஓரம்போகியார் பாடியது . ஓரம்போதியார், ஒன்னார் உழவர் , காம்போதியார் என்றும் அழைக்கப்படுகிறார் - ஆதரித்தவன் ஆதன் அவினி சேர மன்னன்.

---

**சேரமன்னன் ஆதன் அவினி:**

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்ற அன்பின் ஐந்திணையான களவு கற்பு என்ற இருவகையினாலும் ஒழுகிய தலைவன் பிரிந்து இருந்தான் . தான் பிரிந்திருந்த காலத்துத் தலைவியும் தோழியும் ஒழுகிய திறம் அறிய விரும்பினான். அப்போது தோழி தலைமகளின் வேட்கைத் திறமும் தன் வேட்கைத் திறமும் பொரு ந்த உரைத்த பாக்களின் தொகுதியே வேட்கைப் பத்து.

வேட்கைப் பத்து , ஐங்குறுநூறில் இடம்பெறுகிறது . இப்பாடல்களை இயற்றியவர் ஓரம்போகியார். இவர் ஆதன் அவினி என்ற சேர மன்னரால் ஆதரிக்கப்பட்டவர் . வேட்கைப் பத்தில் இடம்பெறுகின்ற பாடல்களில் சேரமன்னரைப் பற்றி பத்துப்பாடல்களில் பெருமையாக சிறப்பித்துக் கூறியுள்ளார்.

அவனி மன்னன் நாடு காவல் செய்யின் மங்கையர் கற்பு மாண்புறும், தன்னிடம் வந்து இரந்தவர்க்குப் பொன் முதலியவற்றைத் தந்து புகழ் பெற்றவன் எனப் புகழ்ந்துரைக்கிறார் . அவனி ஆட்சி செய்கின்ற இந்நாட்டில் அறமும் இன்பமும் அடைவதற்குரிய பொருள் வருவாய் கருதி விளைக வயல் என்பதோடு, எல்லா வளமும் இருக்கின்ற நாட்டில் அறம் தழைத்தோங்கும். புகழ் உணைடாவதற்குரிய ஈகைக்குரிய இடமாக இவனது நாடு உள்ளது என்பதால் வருக இரவலர் என்றும் பாடுகிறார்.

ஆதன் அவினி வாழ்க என்று வாழ்த்திப் பாடுகிறார் . மன்னன் செங்கோல் நடத்த பார்ப்பார் வேதம் ஓத, வானம் தவறாது

மழை பெய்ய பொருள் மிக இல்லறம் இனிதே நிகழும் . பார்ப்பார் வேதம் ஓதுதலால் மன்னன் வாழ்நாள் பெருகும்.

பசியும் நோயும் நல்ல வாழ்வைக் குலைப்பவை , இவை அவினியின் நாட்டில் இல்லை . வேந்தன் பகைமை நீங்குக . அவன் பல ஆண்டுகள் வாழ்க எ ன்கிற அறநெறியை விரும்பி ஒழுகினார்கள். அரசன் செங்கோல் முறையைச் சிறப்பாகச் செய்தான்.

ஒரு நாட்டில் பொய்யும் கொலையும் களவும் மிகுந்தால் எழிலான அரசு முறை கெடும் . அவினியின் நாட்டில் அரசன் செங்கோல் முறையைச் செலுத்துகிறான். அருந்திறல் அரசர் முறை செயின் அல்லது பெரு ம்பெயர்ப் பெண்டிர்க்குக் கற்புச் சிறவாது . அவன் நாட்டில் பிறர் பொருளை கவர்ந்து கொள்ளுதல் இல்லை.

வாழ்வின் பயன் இன்பத்தை அனுபவித்தல் இந்த இன்பம் அவினியின் நாட்டில் நிறைந்துள்ளது. தீது உள்ளதென்றால் இம்மை மறுமை இரண்டும் இல்லாது போகும் . எனவே இங்கு தீது இல்லாருக என்று பாடுகிறார் ஓரம் போகியார் . பருவமழை தவறாது பொழிந்தது ஆதன் அவினியின் நாட்டில் நாடும் நாட்டு மக்களும் நலமுடன் அவினியின் குடைகீழ் இன்பமுற்றிருந்தனர்.

---

## முல்லை கலி:

தோழி! பால் கலந்த பாத்திரங்களை எல்லாம் வீட்டினுள் வைத்துக் கன்றுகளைக் கட்டி, தாய் தந்த நீல ஆடையை உடுத்தி மெல்ல நடந்து நம் குலப்பெண்களோடு முல்லைப் பூக்கள் நிரம்பிய சோலையில் விளையாடினேன். அப்போது அவ்வழியே வந்த குருந்த மலர்க் கண்ணி சூடிய பொதுவன் என்னிடம் பேசத் தொடங்கி அணிகலன் அணிந்த அழகாக விளங்கும் பெண்ணே! நீ சிற்றில் கட்டி விளையாடுவதற்கு நான் சிற்றில் அமைத்துத் தரட்டுமா? என்று கேட்டான்.

நான் திருமணம் செய்து கொள்ளாமல் மனைவியாக வர இருப்பவள் அவளுடைய பெற்றோர் கட்டிய வீட்டில் இருக்கின்றாள் என்று மனைநிறைவு கொள்பவன் நீ என்று பதில் சொன்னான். அவன் பெண்ணே! உனது கூந்தல் மகரந்தப் பொடிகளால் அழகு பெறுமாறு நான் மாலை கட்டிச் சூட்டலாமா? என்று கேட்டாள். நான் நீ தொடர்பில்லாதவர் தரும் மாலையை ஏற்றுக் கொள்வாயா? நீ என்னிடம் இவ்வாறு கேட்டது உன் அறியாமையைக் காட்டுகிறது என்று பதில் சொன்னேன்.

அவன் அதற்குப் பின்பும் விடாமல் பெண்ணே! உன் மார்பகத்தில் தேமல் தோன்றும், அந்த இயற்கையழகுடன் நான் தொய்வில் எழுதலாமா? என்றாள். நான் தொடர்பில்லாத பிறகு எனக்கு அணிசெய்து விடுவர் என்று காத்திருப்பேனா? இவ்வாறு பேசுவதற்கு உனக்கு மயக்கமா? விட்டுவிடுக என்றேன்.

தோழி! அவன் கூறியவற்றிகெல்லாம் நான் மறுப்புக் கூறவே அவன் மனம் கலங்கித் திரும்பிச் சென்றான். நீ மகளிர் ஏறு தழுவியவரையே மணப்பர் என்று உரைப்பாயாக! செவிலித்தாய்க்கும் தந்தைக்கும் என் களவை வெளிப்படுத்தி அறத்தொடு நிற்பாயாக! இதனால் அவன் துன்பத்தையும் என் துன்பத்தையும் நீ நீக்கியவள் ஆனாய்.

---

## நெய்தல் கலி (தாயமும் உறவும்)

முன்னுரை:

தாயக் கட்டம் ஆடும் பெண்களுள் ஒருத்தியான தோழி , தலைவனிடம் சென்று அந்த விளையாட்டிலே ஏற்படும் மன நிலையை ஒட்டியே பேசி அவனது பிரிந்து போகும் எண்ணத்தை மாற்றுகிறாள். வரைவிடை வைத்துப் பிரியக் கருதிய தலைவனைத் தோழி தலைவி யாற்றாமை கூறிச் செலவு விலக்கி வரைவுகடாயது என்னும் கூற்றாகும்.

தோழி தலைவனுடன் தலைவியின் நிலையை பற்றி உரையாடிது:

சூதுக் கருவி:

சிறு படகுகள் கடல் அலையால் அசைய மணல் பரப்பில் தண்ணீர் வடிய அங்கு வளையில் இருக்கும் நண்டுகள் வெளியே வந்து மணல் காய்ந்த இடத்தை நோக்கி ஓடும் . சிறிது நேரத்தில் மீளும் . இதனால் மணிலில் உண்டாகிய வரிகள் சூதாடும் அரங்கத்தில் சூதுக் கருவியை இடைவிடாது உருட்டுதலால் உண்டாகும் வடிவைப்போன்று இருக்கும் கடல் நிலத்துத் தலைவனே!

ஈரைந்து தாயமும் சிறு தாயமும்:

முத்துப் போன்ற வெண்மையான மணல் பரப்பில் உள்ள சோலையில் நீ அருள்செய்த போது , சூதில் ஈரைந்து தாயம் பெற்றவன் மனம்போல மகிழ்ந்தாள் தலைவி. நீ, பிரிந்ததால் அழகு

குன்றி அச்சூதில் சிறு தாயம் விழப்பெற்றுத் தோற்றவனைப் போலத் துன்பத்தால் வருந்துவதோ?

<u>தலைவியின் துயரம்:</u>

கடற்கரைச் சோலையில் தாழைப் புதர்களின் மறைவான இடத்தில் நீ அருள் செய்த போது சூதில் வென்றவன் மனம்போலத் தலைவி மகி ழ்ந்தாள். இப்போது கொடையில் வல்லவனாகிய நீ பொருளுக்காகப் பிரிய எண்ணினால் சூதில் தோல்வியடைந்து இழந்தவனைப்போல இவள் துயரால் வருந்துவதோ? நெறியில்லாத சூதாட்டத்தில் ஈடுபட்டுக் கட்டிவைத்த பந்தயப் பொருளையும் இழந்தவனைப் போல , உன் கூட்டுறவு அசையை விரும்பி அழகினையும் போ க்கித் துயரிலே கிடந்து அவள் வாட வேண்டுமோ?

நறுமண மலர்கள் உதிர்ந்து கிடக்கும் புன்னை மரத்தின் நிழலிலே நீ விரும்பி வந்து கூடியிருந்த போது இரு முறையும் தாயம் இட்டு வென்றவனைப் போல மனங்களித்து விளங்கினாளே? பிரிந்து போவேனென்று சொல்லி , நீ பிரியக் கருதிய செய்தியைக் கேட்டால் என்ன ஆவாளோ ? இருகால் சிறு தாயம் வேண்டும் நேரத்திலே ஒருகால் தாயம் இட்டவனைப் போலச் செறிந்த துயரிலே அவள் அழுவதா?

<u>அடைக்கலம் தருக:</u>

ஊரில் எழுந்த பழிச்சொல்லுக்கு நீ அஞ்சவில்லை இவ்வாறு இருக்காமல் இவளைத் திருமணம் செய்துகொண்டு அருள் செய்து அதற்குரிய திறத்தை அறிந்து உடனே உன் தேரில் ஏறுக. அவ்வாறு நீ திருமணம் செய்து கொண்டால் இவள் அழகு அறிவோடு கூடிய உழைப்பாளியின் இடத்துச் சேரும் செல்வத்தைவிடப் பெருகுவதாக.

---

<u>பதிற்றுப்பத்து:</u>

சேர மன்னர்கள் பதின்மரைப் பற்றிப் பத்துப்புலவர்கள் பாடியது - புறப்பொருள் - சேரர்களின் வரலாறு - முதல் பத்தும் இறுதி பத்தும் கிடைக்கவில்லை - இரண்டாம் பத்து முதல் ஒன்பதாம் பத்து மட்டுமே உள்ளது - நான்காம் பத்து அந்தாதியாக அமைந்தது.

- 42 பாடல் (கொடைச் சிறப்பும் வென்றி சிறப்பும் ) - பாடியவர் ∞ பரணர் - பாடப்பட்டோன் ∞ சேரன் செங்குட்டுவன் - 42பாடல் (கொடைச் சிறப்பும் வென்றி சிறப்பும் ) - துறை ∞ செந்துறைப் பாடாண் பாட்டு - பெயர் ∞ தசும்பு துளங்கு இருக்கை - குட்டுவனின் கொடைச் சிறப்பையும் , வெற்றிச் சிறப்பு - “இரும்பனம் புடையல், ஈகை வான்கழல்”.
- 45 பாடல் (வெற்றிச் சிறப்பு ) - பாடியவர் ∞ பரணர் - பாடப்பட்டோன் ∞ சேரன் செங்குட்டுவன் - பெயர் ∞ ஊன் துவை அடிசில் (இறைச்சியும், துவையலும் கலந்த உணவு ) - செங்குட்டுவன் கடல் கொள்ளையர்களை அழித்தான்.

---

<u>சேரன் செங்குட்டுவன் - கொடைச் சிறப்பும் வெற்றி சிறப்பும்:</u>

கரிய பனந்தோட்டினால் கட்டப்பட்ட பனை மாலையினையும் பொன்னால் செய்த வீரக்கழலையும் உடைய நின் படைவீரர் இரையின் பொருட்டு மீனை ஆராயும் சுழற்சியால் , குளிர்ச்சியையுடைய குளத்தில் மூழ்கி மீன் கொத்திப் பறவை மேலே எழுந்தாற் போன்ற நெடிய வெள்ளிய ஊசியினது நீண்ட கூர்மை தைத்ததனால் பரவிய தழும்பு ஆழ்ந்த மார்பினையும் அம்புகள் தைத்த உடம்இனையுடையவராய்த் தம்மொடு போரிட வந்தவரோடன்றி ஏனையோரோடும் தும்பை சூடாமல் போர் செய்யும் பெருமையுடைவராவர் . நல்ல நெற்றியினையுடைய சேரமாதேவியின் கணவனே ! பெருமை பொருந்திய யானையினையுடைய கொல்லுகின்ற போரில் வல்ல செங்குட்டுவனே!

நீ வலிமைமிக்க போரில் வஞ்சனை செய்யாமல் பகைவரை எதிர்த்து நின்று அழித்து வெற்றி பெற்றாய் . உன்னைப் பாடுவோராகிய கூத்தரின் பெரிய சுற்றம் வாழும்படி இஞ்சியும் பூவும் விரவித் தொடுத்த மாலையினைக் கழுத்தில் அணிந்து கட்டிச் சந்தனத்தை வெளிப் பகுதியில் தெளித்து மாலையினைக் கழுத்தில் அணிந்து கட்டிச் சந்தனத்தை வெளிப் பகுதியில் தெளித்து இருக்கையில் வைக்கப் பெற்றுள்ள கள் குடங்களில் உள்ள நீலமணியின் நிறம் கொண்ட சுவைமிகுந்த மதுவினை அவர்களுக்கு அளித்து மகிழ்ந்தாய்.

அவர்களுக்குத் தலையாட்டம் பொருந்திய பல குதிரைகளை நீ வழங்கினாய் . அதன் எண்ணிக்கை மக்கள் வியக்கும்படி இருந்தது . வீரர்களோடு உயர்ந்த கொம்புகளைக் கொண்ட யானை மேல் ஏறி வந்தாய். யானைமேல் நீ வருவதைக்

காண்பதற்காக உன் தேர் வீரரும், படைவீரரும் பிறரும் நெருங்கிச் சூழ்ந்தனர். மக்கள் நெருங்கிச் சூழ்ந்த பெரியகடலாகிய அலைமிகுந்த நீர்ப்பரப் பில் வெண்மையான நுரையாகிய தலை பிசிறாக உடையும்படி பல அலைகள் தோன்றும் . அலைகளின் எண்ணிக்கையை விட நீ வழங்கும் குதிரைகளின் எண்ணிக்கை அதிகம்.

---

**சேரன் செங்குட்டுவனின் வெற்றிச் சிறப்பு - ஊன் துவை அடிசில்:**

பொன்னாற் செய்யப்பட்ட அழகிய தும்பைப் பூவினையும் பலவகைச் சித்திரத் தொழில் அமைந்து விளங்குகின்ற தூணியில் புற்றிலே அடங்கிய பாம்பைப் போல ஒடுங்கிய அம்புகளையும் வளைதலையுடைய வில்லினையும் ஒடுங்காத மனவெழுச்சியும் ஆண்யானைகளைக் குத்தி வளைந்த வடுகளைப் பெற்ற வேலினையும் உடைய போர்வீரர்கள் நெருங்கியுள்ள பரந்த இடத்தையுடைய போர்க்கள த்தினையும் ஏழு அரசர்களின் முடிப் பொன்னால் செய்யப்பட்ட மாலையை அணிந்த மார்பினையுடை செங்குட்டுவனே!

இப்பகைவர் தாம் ஆழ்ந்த இடத்தையுடைய அகழியையுடைய மதில்கள் பலவற்றை வஞ்சியாது வென்று கைக்கொண்டு முன்பு தான் உள்ளே புகுந்து அழித்து அவ்விடத்தே சோறு சமைத்து உண்டவர் நா ட்டில் பொருந்திய பழையனவாய் வரும் உரிமையையுடைய அகன்ற இடத்தையுடைய அரண்களில் கதவுகளைக் காக்கும் கணைய மரத்தைப் போன்ற , பகைவர் நிலத்தைப் பெறுதற்குக் காரணமான திணிந்த கையை உடையவர், அக்கைகளை உயர வீசிப் பிணங்கள் உயர்ந்த போர்க்களப் பரப்பில் துணங்கைக் கூத்தை ஆடியவர் . அரசனுக்குச் சோறு வேறு உள்ளதென்று சொல்லாத வகையில் எல்லோருக்கும் ஒரே போல உயர்ந்த ஊனையும் துவையலையும் உடைய உணவை , போரில் புறங்கொடுத்து ஓடாத பெருமையமைந்த தம் வீரர்களுக்கு அவர்கள் இருக்கும் இடங்களில் அளித்தவர் ஆவர் . தம் நாட்டில் அரிய வழிகளைப் பகைவர் நுழையா வண்ணம் அடைத்தற்கு முள்ளிடுதலையறியாத எல்லையுடையவர் , பகைவரது வில்லில் இருந்து வரும் அம்பின் வேகத்தை அடங்கச் செய்த வன்மையையுடைய வெள்ளிய கிடுகுப்படையைப் போன்ற பண்பினையுடைய சேனையையுடைய அரசனே!

மேகங்கள் படிந்து கடலின் நீரைக் கொள்ளுதலால் குறையாமலும், ஆற்று நீரும் தன்னி டத்தே வந்து புகுதலால் நிறைந்து கரை கடவாமலும் குறுக்காக வீசும் காற்று செலுத்தலால் அசைதலையுடைய மிகவும் நிறைந்த நீரினையுடையதாகக் கடல் விளங்குகிறது . அத்தகைய கடலில் விளங்குகின்ற மணியைப் போன்ற ஒளி வீசுதலையுடைய வேற்படைகளை ஏவி அக்கடலகத்தே எதிர்த்த பகைவரைத் தடுத்தளித்த மன்னர் இனி யார் உள்ளார்? உனக்கு முன்னும் எனில் ஒருவரும் இல்லை.

கடலகத்துள் தீவு ஒன்றில் இருந்து கொண்டு அவ்வழியே செல்லும் மரக் கலங்களைக் கொள்ளை அடிந்த வந்த கூட்டத்தினை செங்குட்டுவன் தன் படைகளைச் செலுத்தி அழித்தான்.

---

**நற்றிணை:**

எட்டுத்தொகையில் முதல் நூல் - பாரதம் பாடிய பெருந்தேவனார் கடவுள் வாழ்த்து - 400 பாடல்கள் - 9அடி சிற்றெல்லை 12அடி பேரெல்லை - அகத்துறைப் பாடல்கள் - 275 புலவர்கள் பாடியது - 192 புலவர்கள் தெரிந்த புலவர்கள் - தொகுப்பித்தவன் பன்னாடு தந்த பாண்டியன் மாறன்வழுதி - தொகுத்தவர் பெயர் தெரியவில்லை.

- *நெய்தல் திணை* - 72பாடல் (நட்பு மறையுமோ ?) - தோழி சிறைப்புறமாகத் தலைவிக்கு உரைப்பவாய்ச் சொல்லிய கூற்று - *இளம்போதியார்* பாடியது - “பேணுப பேணார்”
- *பாலை திணை* - 110பாடல் (சிறு மதுகை ) - மனைமருட்சி மகள்நிலை உரைத்தூஉம் ஆம் - *போதனார்* பாடியது - “பிரசம் கலந்த வெண்சுவைத் தீம்பால்”.
- *மருத* திணை - 216பாடல் (வேட்டோரே இனியர் !)நீ - தலைமகளின் உறவினர்கள் கேட்குமாறு தலைவன் தலைநின்று ஒழுகப்படாநின்ற பரத்தை , பாணற்காயினும் விறலிக்காயினும் சொல்லுவாளாய் நெருங்கிச் சொல்லியது - *மதுரை மருதன் இளநாகனார்* பாடியது - துனிதீர் கூட்டமொடு துன்னார் ஆயினும்”.

- *முல்லை* திணை - 238பாடல் (பருவஞ் செய்த மாமழை ) - தலைமகள் பருவங்கண்டு அழிந்தது (கூற்று) - *கருவூர்க் கந்தரத்தனார்* பாடியது - "வறம்கொல வீந்த கானத்து".
- *மருத திணை* - 310பாடல் (போர்வை அஞ் சொல்!) - வாயிலாகப் புக்க விறலியைத் தோழி சொல்லியது , விறலியை எதிர்ப்பட்ட பரத்தை சொல்லியதூஉம் ஆம் - *பரணர் பாடியது* - "விளக்கின் அன்ன சுடர்விடு தாமரை".

நெய்தல் திணை - இளம்போதியார் - நட்பு மறையுமோ?:

தோழி! பேண வேண்டுவன எனப் பிறர் கருதும் பொருள்களைப் பெரியோர் விருப்பமுடன் பேணமாட்டார்கள் . அவரது அந்த நிலையை ஆராயுங் காலத்தே பெரிதும் வெட்கத்தைத் தருவதாகின்றது. இருவரும் ஓர் உயிராய் அமைந்தாற் போலும் குற்றமற்ற நிறைந்த நட்பினை உடையவளான உனக்கு , நான் ஒன்றை மறைத்தல் என்பதும் எத்துணைக் குற்றமாகும் ? முன் காலத்தே, நான் தாய் அறிந்து விடுவாள் என நான் அஞ்சுகின்றேன் எனக் கூறினாலும் , தான் என்னைப் பிரிந்திருந்தலைக் கருதினாய் உடனிருந்தலையே நாடியவனாக இருந்தனன். இது காலை அது தான் நடந்தது. கானலிடத்து விளையாடுகின்ற ஆயர் மகளிர் அறிந்தாலும், இக்களவு மறைகடந்து வெளிப்பட அதனால் பழிச்சொல் வருமோ? என்று கூறி அகன்று போகின்றான். அதனால், அவன் நட்பானது இல்லை என்றாகி போகுமோ என்று கருதி , நானும் என் உள்ளத்தே பயந்து நிற்பேன் . அந்த அச்சத்தாலும் மிகப் பெரியதாக எனக்கு அழிவைத் தருகின்றதாக உள்ளது.

மருதம் - வேட்டோரே இனியர் - மதுரை மருதன் இளநாகனார்:

தலைவர் தம் ஊடலைத் தீர்த்துக் கூடி இன்புறும் , இணைவில் பொருந்தி என்னிடம் வாரார் ஆயினும் அவர் மேனியை நோக்கி பலமுறை மகிழ்ந்துள்ளேன் . அவ்வாறு காணத்தக்க அழகுடைய தலைவரைக் கண்டுகொண்டிருந்தால் உயிருடன் வாழ்தல் இனிதாய் இருக்கும் அவ்வாறு நான் காணவில்லை . கண்ணில் விழும் நுண் மையான தூசியையும் கைவிலக்குவதைப் போல நாம் கொண்ட துன்பத்தை நம் தலைவர் நீக்காமல் போனாலும் அவர் இல்லாத ஊர் நமக்கு மிகுதியான துன்பத்தைத் தருகிறது.

முல்லை - பருவஞ் செய்த மாமழை - கருவூர்க் கந்தரத்தனார்:

கோடை வறட்சியால் பட்டுப்போன காட்டில், சிறிய மலரை அணிந்த கூந் தலை உடைய ஆயர் மகளிர் கூடும் கூட்டம்போல , வண்டுகள் வாய்திறந்து தேனுண்ணுமாறு பிடவ மலர்கள் மலரும் . பிடவம் மலரும் அந்தி மாலையில் என் அன்பு மிகுமாறு செய்கின்ற கார்ப்பருவத்தைத் தோற்றுவித்த மேகமே ! நீ அவர் நிலை அறிவாயா? என்னுமாறு நீ இங்கு வரும் தொழில் சான்றோரின் செய்கையை ஒத்தது ஆகாது. நீ மோதி ஒலிக்கும் குரலை உடைய இடியேறாய் முழங்குவாய் அவ்வொலி எங்கும் பரவி பாம்புகள் படம் குன்றுமாறு வலி அடங்கச் செய்வதே அன்றி பண்புடைய தலைவனின் நெஞ்சத்தைக் கனியச் செய்வதன்று அதனால் உனது குரல் எனக்கு இனிமையைச் செய்யவில்லை.

மருதம் - போர்வை அஞ் சொல் - பரணர்:

விளக்கைப் போன்று ஒளி வீசுகின்ற தாமரை மலர் இருக்கும் பொய்கையில் யானையின் காதுகளைப் போன்ற பசுமையான இலைகளைக் கொண்ட நீர்த் துறையில் பெண்கள் அஞ்சி ஓட ஆழமான நீருடைய குளத்தில் வாளை மீன்கள் துள்ளிப் பாயும். இத்தகைய சிறப்புடைய ஊரனுக்கு நாளைக்கு ஒரு பரத்தையைக் கொண்டு வந்து கொ டுத்தலாகிய செயலை மேற்கொள்ளும் அறிவற்ற விறலியே ! உண்மை பேசுதலைத் தவிர்த்த நாவால் நிலைகுலைந்த இழிந்த உன் சொல்லுக்கு உடன்பட்ட அப்பரத்தையின் தாயாருடன் நீ விரைவாகச் சென்று , பசுவின் கன்றை உரித்து உணவாகக் கொள்கின்ற பாணன் கையில் உள்ள பெரிய ஒலியை எழுப்பக் கூடிய தண் ணுமை என்ற இசைக்கருவியைப்போல் உள்ளே ஒன்றுமில்லாத மேற்பார்வை உடைய சொற்களைச் சொல்லுகின்றாய் . அவ்வாறு பொருளற்ற பொய்மொழிகளைச் சொல்லி அவரையும் பிறர் இணையுமாறு செய்யலாம் அல்லவா ? இது தலைவனின் காமக்கிழத்தியர் இல்லுறை மனைவி போல உரிமை கொண்டாடுதலைத் தடுத்ததாகும்.

பாலை - சிறு மதுகை - போதனார் - (நற்றிணை):

மென்மையான நரைத்த கூந்தலையுடைய வயதான செவிலியர் தேன் கலந்த நல்ல சுவையையுடைய இனிய வெண்ணிறப் பால் கலந்த உணவைப் பொற்கலத்தில் இட்டு ,

அதனைக் கையில் ஏந்தி மெல்லிய சிறுகோலால் ஓங்கிப் பயமுறுத்தி, நீ உண்க என்று அடித்தனர்.

தெளிந்த நீரின் முகிழ்ந்த முத்துக்களைப் பரவலாக இட்டுப் பொன்சிலம்புகள் ஒலிக்குமாறு தாவி ஓடும் தன்மையள் என் மகள், அவள் செவிலியர் பின்தொடர இயலாது விரைவாகச் சென்று பந்தலின் கீழ் நின்று உண்ணேன் என்று மறுக்கும் சிறுவிளையாட்டுப் பருவத்தினள்.

அத்தகையவளுக்கு எவ்வாறு அறிவும் ஒழுக்கமும் வந்தன. தான் மணந்த தலைவன் குடி வறுமையுற்ற சூழலிலும் தன்னைப் பெற்ற தந்தையின் வளமான உணவினைக் கருதாதவள் ஆனாள் . எப்பொழுதும் தன் கொள்கையில் நிற்கும் வலிமை பெற்றவள் ஆனாள். இது வியப்பாக உள்ளது.

---

குறிஞ்சிப் பாட்டின் கதைச் சுருக்கத்தை எழுதுக.

தலைவியும் தோழியும் ஒருநாள் தினைப்புனம் காத்துவரச் சென்றனர். திணைக்கதிர் உண்ண வந்த கிளிகளை விரட்டிய பின்னர், மலையருவியிலும் சுணைநீரிலும் பாடி மகிழ்ந்தபடியே கண்கள் சிவக்க நீராடினர். பலவகையான வண்ண மலர்களைப் பாறையில் குவித்தனர். பின்னர் அசோகமர நிழலில் தங்கியிருந்தனர்.

வேட்டை நாய்கள் துரத்த மதயானை ஒன்று பிளிறியபடியே ஓடி வந்தது. அவ்விருவரின் அருகே வரத் தலைவன் அந்த யானையை அம்பு எய்து விரட்டினான். தலைவனால் தலைவி காப்பாற்றப்பட்ட இந்நிகழ்ச்சி, தலைவன் தலைவியினிடையே காதல் வளரக் காரணமாயிற்று. அவளையே மணமுடிப்பதாய் உறுதிமொழி கூறினான். இருவரின் சந்திப்பும் தொடர்ந்தது.

அச்சம் விளைவிக்கும் இரவுப் பொழுதில் தலைவியைச் சந்திக்க வந்தான் தலைவன். அவன் வரும் வழி, கொடுமையும் துன்பமும் தரும் வழியென்பதைத் தலைவி அறிந்தாள். அதனை எண்ணிக் கலங்கினாள். தலைவனுக்கு என்ன நேருமோவென வலையிலகப்பட்ட மயிலாகத் தலைவி வருந்தினாள்.

இந்நிகழ்ச்சிகளையெல்லாம் தோழி செவிலித்தாயிடம் ஒரு நாடகம் பார்ப்பது போலவே விவரிக்கின்றாள்.

---

<u>இரவுப் பொழுதில் தலைவன் வரும் வழி எத்தகைய அச்சம் விளைவிப்பது என்பதனைச் கபிலர் சுட்டிக்காட்டுகிறார்?</u>

தலைவன் இரவுக் குறியில் தலைவியைக் காண வருவது வழக்கம். ஆனால் அவன் வரும் காட்டுவழி மிகுந்த துயர் தரக்கூடியது.

ஊர்க்காவலர் எதிர்ப்படுவர். காவல் நாய் குரைக்கும், நிலவு வெளிப்படும் இவை தலைவன் வருகையை உணர்த்திவிடும் என்றாலும் அவன் அஞ்சாதவன். தலைவியின் இன்துயிலை அவன் பெறாமல் போனாலும் கூட அதற்காகக் கலங்காதவன். சிறிதும் கோபம் அற்றவன். தலைவன் இளமையைக் கடந்தவனுமல்லன், செல்வச் செருக்கு காரணமாக அவனிடத்துச் சிறிதும் நற்பண்புகள் நீங்கி விடவில்லை.

இவ்வாறு இரவில் வந்தபோதும் தலைவன் வரும் வழியில் புலிகளும் கரடிகளும், மான்களும், யானைகளும் வாழும் அவ்வழி துன்புறுத்துத்தற்குக் காரணமான வழி. வழியில் இடிமுழக்கம் அச்சந்தருவதாய் இருக்கும். கொடுந்தெய்வங்கள் வருத்தும், இரைதேடும் பாம்புகள் திரிந்தபடி இருக்கும் முதலை, இடங்கர், கராம், ஆகிய நீர்நிலைத் திரியும் முதலை வகைகள் வழிகளில் யாரையும் தப்பவிடாது.

வழிப்பறிக் கொள்ளையர் ஒருபுறம் அவ்வழிக்கண் வருவோரையும் போவோரையும் வருத்திப் பொருள் கவர்வர். அவர்கள் ஆங்கு வருவோரைக் கொல்லத் தயங்காதவர். பேயும் மலைப்பாம்பும் மிகுந்த இடர்தரும்.

இப்படிப்பட்ட கொடிய வழியை எண்ணித் தலைவன் அவ்வழியில் வருவதற்காக வருந்துவாள் தலைவி, வலையில் அகப்பட்ட மயில்போல் அழுவாள்.

---

மாலைக்காலம் குறிஞ்சிப்பாட்டில் கபிலரால் எவ்வாறு புனையப் பெற்றுள்ளது?

குறிஞ்சி பாடுவதில் வல்ல கபிலர் மலைநிலத்தில் மாலை நேரம் வந்ததை அழகுற வருணித்துப் பாடியுள்ளார்.

ஏழு குதிரைகள் பூட்டிய தேரைச் செலுத்திய சூரியன் பகற்பொழுது கழிந்ததும் மாலையில் மறைந்தான். அந்திக் காலம் வந்தது. மான் கூட்டங்கள் மரத்தடியில் வந்து உறைந்தன. பசுக்கள் தன் கன்றுகளை அழைக்கும் குரலோடு பட்டியில் வந்து நிரம்பின. ஊதுகின்ற கொம்பு போலும் குரலுடைய அன்றிற் பறவை பனைமரத்தின் உள்மடலிலிருந்து பெட்டையை அழைத்துக் கூவிற்று, பாம்பு மாணிக்க மணியை உமிழத் தொடங்கியது.

இடையர்கள் ஆம்பல் பண்ணைக் குழலில் இசைத்தனர். ஆம்பற் பூக்கள் விரிந்தன. செல்வ மகளிர் தம் இல்லங்களில் அந்தி விளக்கேற்றி மாலைக் காலத்தை வரவேற்றனர். அந்தணர்கள் அந்திப் பொழுதில் தமக்குரிய கடன்களை ஆற்றினர். கானவர் தீக்கடைக் கோலால் நெருப்பு உண்டாக்கினர்.

மாலைக்கால மேகம் கறுக்கத் தொடங்கியது, ‘கல்’ என்னும் ஒலியோடு காட்டில் உறையும் விலங்குகள் ஒன்றுக்கொன்று மாறி மாறி ஒலி எழுப்பின. பறவைகள் ஆரவாரத்தோடு கூவின. பகைவரொடு போர் செய்தற் பொருட்டு வேந்தன் மிக வேகமாக செல்லுதல் போல் மாலைக் காலம் விரைந்து நெருங்கிவரத் தொடங்கியது.

---

**தலைவி யானையைக் கண்டு அஞ்சிய நிலையையும் தலைவன் அவளது அச்சம் அகற்றிக் காதல் கொண்ட நிலைமையையும் கூறுக.**

மலைச்சாரலின் மதயானை ஒன்று தினைப்புனம் கவர வந்தது. கானவர்கள் சிறுமை கண்டு கொதிப்படைந்தனர். சினங்கொண்ட யானை அங்குள்ள மரத்தை முறித்தது. கார்கால இடிபோலப் பிளறியது. ‘தட்டையை ஒலித்து காடு கல் என்னுமாறு ஓசையுண்ணாக்கினர். வாயால் சீழ்க்கை ஒலி எழுப்பினர். யானை, நீண்ட துதிக்கையால் தரையை ஓங்கி அடித்தது.

சிங்கம் போல் அவர்களிடம் பாய ஓடியது உயிர் பிழைக்க இடமறியாமல் மனம் நடுங்கினர் வளை ஒலிக்க ஓடினர். தெய்வம் ஏறிய மயிலை போல் தலைவியும் தோழியும் நடுங்கினர்.
தலைவன் நாணேற்றி அம்பு தொடுத்தான். யானை முகத்தில் அம்பு தைத்து இரத்தம் வழிந்தது. யானை புறமுதுகிட்டு ஓடியது.

வெள்ளம் பெருகுவதால் அலைகள் மோதி அலைப்ப, கரையில் நின்ற வாழைமரம் போல அவ்விருவரும் நடுங்கினர். அச்சமயம் தலைவன் அழகிய மணமிக்க கூந்தலையுடையவளே! வருந்தாதே! என் சொற்களைக் கேட்பாயாக! அஞ்ச வேண்டாம். உனது அழகிய நலம் நுகர்வேன் என உறுதி கூறியபடியே தலைவியின் ஒளிபொருந்திய நெற்றியைத் தடவிக் கொடுத்தான். ஆழ்ந்த சிந்தனைக்குப் பிறகு தோழியைப் பார்த்து தனக்கு அவளது உதவி தேவை என்பதுபோல உள்ளக்குறிப்பை உடையவனாய் தோழி முகம் நோக்கிச் சிரித்தான்.

இந்நிலையில் தலைவியின் நாணமும் அச்சமும் பழையபடி மீண்டும் அவளித்துப் புகுந்தன. பெண்மைக்குரிய பண்பிற்குத் திரும்பிய தலைவி தலைவனைவிட்டுப் பிரிய எண்ணி ஓடி வரமுயன்றாள். அவனோ, அவளை விடாமல் கைகளால் அணைத்துக் கொண்டு தழுவினான்.

இருவரின் உள்ளத்தையும் புரிந்து கொண்டவன்போல், தலைவன் மீண்டும் பேசலானான். நாடோறும் வருபவர்க்கெல்லாம் வரையாது பங்கிட்டுக் கொடுத்து இன்புறும்படியான இல்லம் பொலிவோடு சிறக்க வேண்டும். பலரும் வந்து உண்ணுமாறு அகன்ற வாயிலைத் திறந்து வைக்க வேண்டும். பசிய நிணம் ஒழுகுகிற நெய்மிக்க சோற்றைத் தலைவி இடுகையில் உயர்ந்தோர் தம் சுற்றத்தோடு வந்து விருந்துயர வேண்டும். யாவரும் விருந்துயர்ந்த பின்னர், எஞ்சிய சோற்றை, பெருந்தகை பொருந்திய பெண்ணே! நின்னொடு சேர்ந்து உண்பது பெருமை தருவதாகும் என்று கூறினான். இத்தகு இல்லறமே அற வாழ்விற்குத் தெப்பம் எனவும் விளக்கினான்.

எங்கே நாங்கள் ஐயுறுவோமோ என்று கருதியவனாய் முருகனை வாழ்த்தி வணங்கி, அருவிநீரைக் குடித்துத் தலைவியை மணமுடித்துக் கொள்வதாய் உறுதி செய்தான்.

இவ்வாறு தலைவன் தலைவி காதலுக்குக் களிறு காரணமாயிற்று. அருவிடர் அமைந்த களிறுதகு புணர்ச்சி எனத் தோழி இருவரின் காதல் நிகழ்ச்சியைச் செவிலிதாயிடம் கூறினாள்.

---